பூசுரர் குலேசனுநின் புரோகிதன் மைந்தனைந்து, வாசநீள் கணைகரந்த மதன்சுகு மாரனென்போ, னீச னாய்த் தனதுசாதி நீதியா நியமநீத்துத், தூசகல் கர வஞ்சஞ் சூதுசெய் தூர்த்தனாகி. (ருச)

சூல்வளை முழங்கி யார்க்குந் தொடுகடல் வளாக வைப்போர், கோல்வளை யாமற் காக்குங் குரிசினின் னகரந் தன்னிற், கால்வளை வரிவில் லேய்க்குங் கருங் கொடிப் புருவ மின்னார், மால்வளை மனத்த ராய்க்கற் பிகந்திட வருத்து கின்றான். (ருரு)

இல்லின்மே வியமின்னார் தங் குறைகளை யெவர்க்கு முன்னுஞ், சொல்லநா ணுறுவர்யாருந் தோற்றுநோய் துடைத்து மாற்ற, வல்லரா மருத்து வர்க்கு மறைப்ப வருளரோ மன்ன, புல்லரே மானங்காத்துப் புரந்தரு ளெம்மை யென்றார். (ருசு)

கேட்டபோ திருகைப் பேரதாற் கிளர்செவித் துளைகண் மூடிக், கோட்டமி றனிக்கோ லோச்சுங்

---

(ருச) பூசுரர் =(பூலோகதேவர்)பிராம்மணர்; வாசநீள்கணை= வாசனைபொருந்திய நீண்ட மலரம்பு;நீசனாய்=சண்டா ளனாய்; தூசுஅகல் கரவம் = குற்றமிகுந்த வஞ்சனை; தூர்த்தன்=துஷ்டன்.

(ருரு) சூல்வளை = கர்ப்பம்நிறைந்த சங்கு; தொடு = ஆழ்ந்த (அல்லது தோண்டிய); வளாகம் = இடமாகவுடைய; வைப்பு=பூமி; ஓர்கோல்=ஒப்பற்றசெங்கோல்; குரி சில்=அரசனே ? ; கால்=இரண்டு நுனி; வளைவரி= வளைத்துக்கட்டிய; ஏய்க்கும்=ஒக்கும்; மால்வளை=மய க்கஞ்சூழ்ந்த; இகந்திட=நீக்கும்படி.

(ருசு) மன்ன=அரசனே; புல்லரேம்=அற்பராகியஎங்கள்; புர ந்தருள்=கிருபைசெய்து இரட்சி

கோவிருகோக்கள் சேப்ப, வாட்டமில் குமுதச்செய்ய
வாயிதழ் துடிப்ப விந்த, நாட்டர சளித்தநீதி நன்று
நன்றென்ன நக்கான். (ருஎ)

சீற்றமீக் கூரநின்ற சேனைகா வலனை நோக்கி,
மாற்றரும் படிறனாகி மறைக்குலந் தோன்றி னேனைக்,
காற்றென விரைந்து சென்றிக் கணத்தினிற் கொணர்
மினென்னா, வேற்றுரி முரச நாண விடியென முழங்
கிச் சொன்னான். (ருஅ)

குரைகடல் விடத்திற் றோன்றுங் கூற்றுவன் றாத
ரொப்பா, ரரைகொடிப் பொழுதி லோடியந்நகர் முழு
துந்தேடி, வரையில்புன் றொழில்க ளாற்று மறைய
வன் றன்னைப்பற்றி, விரைவுடன் கொணர்ந்து கொற்ற
வேந்தர்கோன் றிருமுன் விட்டார். (ருகூ)

வெய்யவேல் விடலை தூர்த்த விப்பிரன் றன்னை
நோக்கிச், செய்யநான்மறையோர்நீதி திறம்பிடுமிவனைச்

---

(ருஎ) கைப்போது=மலர்போன்ற கரம்; கிளர்=விளங்குகிற; செவித்துளைகள்=காதுகளை; கோட்டமில்=கோணுதலில்லாத; ஒச்சும்=செலுத்தும்; கோ=அரசன்; இரு கோ=இரண்டுகண்; வாட்டமில் = வாடுதலில்லாத (அஃதாவது அப்பொழுது மலர்ந்த); குமுதச்செய்ய= அல்லிமலர்போற் செவந்த; நக்கான் = சிறுநகைசெய் தான்.

(ருஅ) சீற்றம்=கோபம்; மீக்கூர= அதிகரிக்க; மாற்றரும்= ஒழிக்கப்படாத; படிறன்=வஞ்சகன்; ஏற்றுஉரி=காளையினது தோல்.

(ருகூ) குரை = சப்திக்கின்ற; விடத்தில்=விடத்தைப்போல; வரையில் = அளவில்லாத; கொற்ற = வெற்றியுற்ற; வேந்தர்கோன்=அரசருக்கரசன்.

சென்னி, கொய்திட வேண்டு மென்னக் குலமுறை யவ ரைக்கோற, லையநின் மரபு நீதிக் கடாததென் றமைச் சர்கூற. (௬0)

கோமுகங் குளிர்ந்துகோபக் கொடுங்கன றணி ந்துபின்ன, ரேமுகக் கருங்கண் மாதர்க் கிசைந்தகற் பெனுங் கான்காம, மாமுகத் தீயி னுற்சுட் டரும்பழி சுமந்த விந்தக், காமுகன் றனைநம் மெல்லை கடத்தினீர் விடுத்தி ரென்றான். (௬௧)

அனையரவ் வுரைகேட் டந்த வந்தணன் றன்னைப் பற்றி, வனைகழன் மன்னன் காக்கு மாநிலங் கடத்தி யப்பால், வினைவலி யுனக்குச் சூழ்ந்த தென்றவர் விடு த்து மீண்டார், சினைவளர் தருக்கண் மேவுங் கானெறி சேணிற் சென்றான். (௬௨)

விண்ணுறு வரைகளென்ன விளங்குதன் றுணைத் தோள் சேர்ந்த, பண்ணுறு மொழியினுனை நினைதொ றும் பரிந்து நீண்ட, கண்ணுறு புனலா றென்னக் கலு ழவேள் கணைகள் பாய்ந்த, புண்ணுறு மார்பிற்றென்ற ல் புகுந்தழல் போலவீச. (௬௩)

---

(௬0) வெய்யவேல்= கொடிதாகிய வேலாயுதத்தை யுடைய; விடலை=எவ்வனப்பருவமுடைய அரசன்; தூர்த்த = காமுகனாகிய; விப்பிரன்=பிராமணன்; திறம்பிடும்= தவறிநடக்கும்; கோறல்=கொல்லுதல்.

(௬௧) கோ= அரசன்; ஏ=அம்புபோன்ற; முகம் = முகத்தி லுள்ள.

(௬௨) வனைகழல்மன்னன் =வீரக்கழலையணிந்த அரசன்; கா ன்னெறி=காட்டுவழி; சேண்=தூரம்.

(௬௩) விண்ணுறு =ஆகாயத்தையளாவிய; பண்ணுறு=இனி மை பொருந்திய; கலுழ=அழ.

அடுசினக் கூரடி கோடி யாடுகீ டரவமாளி, படும
தக் கலுழி தூங்கும பணைக்கையால் யானைபாயுங்,கொ
டுவரிப் புலிவாழ் காட்டிற் கூளிபோற் றனித்துத் துன்
பத், தொடுதிரிந் தழல்வா னங்கோ ரோடையை யடைந்தா னன்றே. (சு௪)

தத்திவீழ் திரைக ளெற்றத் தவழ்ந்துருள் சங்க
மீன்ற, நித்திலங் கரைகடோறு நிலவுகாலிழலிப்
பொய்கை, மெத்திய நீளமாழும் விரிவுறு மகலமெல்லா,
மத்தியென் றுரைப்ப தல்லா லாரதன் பெருமை சொல்வார். (சுரு)

அம்புய முகமென்காவி யம்பக மாம்பல் வாய்வெண், கம்புகந் தரங்கோ கங்கொங் கைகணைக் கால்வரால்கூர், மம்புகழ் புறந்தாண் ஞெண்டு வருமுழந் தாள்களாகப், பம்புநீர்ப் படுகர் மென்சொற் பாவைய ருருவங் காட்ட. (சுசு)

முரிதிரைச் சிலைகால் கோட்டி மூசுவண் டெனு
நாண் பூட்டி, விரிமலர்க் கமலங் காவி விசிகங்கள் விரை

(சு௪) கலுழி = வெள்ளம்; தூங்கும் = பொழியும்; பணை = பருத்த; வரி = கீற்றுப்புள்ளிகளமைந்த; கொடு = கொடிய; கூளி = பேய்.

(சுரு) எற்ற = மோத; நிலவு = பிரகாசத்தை; கால் = வீசும்; நிழல் = குளிர்ந்த; மெத்திய = பொருந்திய; அத்தி = கடல்.

(சுசு) காவி = நீலோற்பலம்; அம்பகம் = கண்; ஆம்பல் = அல்லிமலர்; வெண்கம்பு = வெண்மைநிறம் பொருந்திய சங்கு; கந்தரம் = கழுத்து; கோகம் = சக்கரவாகப்பட்சி; கூர்மம் = ஆமை; ஞெண்டு = நண்டு; பம்புநீர் = பரவிய சலம்; படுகர் = ஓடை.

விற் கோத்துப், பிரிவெனுந் துயராற்றுவிப் பிரன்ற
னைப்பெருத்தபூசல், புரிதர மதனின் றென்னப் பொ
லிந்தவப் பொய்கை மன்னோ. (௬௭)

மூண்டவெம் பசியாற் செய்ய முளரியார் முளரி
யெங்கு, மாண்டமீ னிரைதேர் வன்மீன் வாய்ப்படா
துகண்டு தப்பித், தூண்டகு வாளைதாவுந் துழனிகண்
டெழுந்து துள்ளி, நீண்டபைங் கயலை நேடித் துரந்து
போய்ப் பாயுநீர்நாய். (௬௮)

முத்தியி லவப்பொய் வேட முயன்றுகண் முகிழ்
த்தி யோகம், புத்தியி னிருந்துதீமை புரிபவரென்னத்
தூங்கித், துத்தியா டரவி னெட்டைக் கழுத்தினைச் சு
ருக்கி மீனைக், குத்திநுங் கிடக்கண்மூடி யிருப்பன குர
ண்டங்கோடி. (௬௯)

---

(௬௭) முரிதிரைச்சிலை =மடித்தலையுடைய அலைகளாகியவில்
லை; கால்கோட்டி =வளைத்து; மூசு =நெருங்கிய; கம
லம் =தாமரை; காவி =குவளை, விசிகங்கள் =அம்புகள்;
விப்பிரன் =பிராமணன்; பூசல்புரிதர =போர்செய்ய;
மதன் =மன்மதன்; நின்றென்ன =நின்றாற்போல.

(௬௮) முளரிஆர் =முட்கள்பொருந்திய; முளரி = தாமரை;
மாண்ட =நிறைந்த; இரைதேர் =இரையைத்தேடுகின்
ற;வன்மீன் =முதலை; உகண்டு =துள்ளி; தூண்தகும் =
தூண்போன்ற; துழனி =சப்தம்; பைங்கயல் = இள
மையாகியகெண்டைமீன்; நேடி = தேடி; துரந்து =
துரத்தி.

(௬௯) முத்தியில் =மோட்சமில்லாத; அவம் =வீண்; முயன்று
=பூண்டு; முகிழ்த்தி =மூடி; துத்தி = படப்புள்ளி ;
அரவின் = பாம்பைப்போல; நுங்கிட =விழுங்க; குர
ண்டம் =கொக்கு; கோடி =அளவில்லன.

ஈட்டுவல் வினையின் கொட்பா லெடுத்திடு மியாக்
கைமாண்டு, மீட்டும்வந் துலகிற் றோன்றும் விகற்பமித்
தன்மை யென்னக், கோட்டுவெண் டிரைகண் மோதுங்
குரைகடற் புவியுள் ளோர்க்குக், காட்டுவ தென்ன
நீரிற் குளித்தெழு காரண்டங் கொள்ளை. (எ0)

தூயவெண் ணிறக்கூன் சங்கஞ் சூலுளைந் தேறி
முட்டாண், மேயசெங் கமலப் போதின் மீதிருந் தொ
ளிருந்தோற்ற, மாயர்கண் படைகண் டன்னோ ரகத்
துறி சரித்து மாயன், சேயகைத் தலத்தில் வாரித் திர
ட்டிய வெண்ணெய் போலும். (எக)

கல்லுநீர்க் கயத்து மீனைக் கதுவ வீழ்ந் ததுபெறு
மற், சில்லுகிர்ச் சிரலை வெட்கிர் சிறைவிரித் திருப்ப
தோர்பாற், சொல்லுநற் றிகிரிப்புள்ளுந் துணைச்சிறை
புலர்த்திக் கோதிப், புல்லுயிர்ப்பேடையோடுபுளினமே
னடப்ப தோர்பால். (எஉ)

---

(எ0) வினையின் சொட்பால் = வினைவசத்தினால்; விகற்பம்= வேறுபாடு; கோட்டு=கரைகளில்; காரண்டம்=நீர்க்காக்கை; கொள்ளை=அளவில்லன.

(எக) சூல்உளைந்து=கர்ப்பத்தால் உபாதியதிகரித்து; முள்தாள்மேய=முட்களுள்ள காம்புகள்பொருந்திய; ஒளிரும் =விளங்கும்; ஆயர்= இடையர்; கண்படை =நித்திரை; சேய=சிவந்த.

(எஉ) கல்லு=அலைகளால்கரையையிடிக்கிற; கதுவ=பிடிக்க; பெறுமல்=அடையாமல்; சில் உகிர்=சிறியநகம்; சிரலை = மீன்குத்தி; திகிரிப்புள்= சக்கரவாகப்பட்சி; புலர்த்தி=உலர்த்தி; கோதி=மூக்கினால்கிண்டி; புல்= சேரும்; உயிர்=உயிர்போன்ற; புளினம்=மணல்மேடு.

மண்டணி லுயர்ந்த பெண்ணைக்கிழங்சினை வகிர்ந்தாலன்ன, துண்டவண் டானநீந் ருழ்ந்த தொழுதிக ளொருபா னீருட், கொண்டருந் தாகநீங்கிக் குதிக்குமாவினங்க ளோர்பா, லொண்டழைச் சிறைப்பாலன்னங் கின்னர மிதுன மோர்பால். (எங)

இன்னதன் மையநீர்வாவி யிருங்கரை தன்னிலெனய்திக், தன்னமர் பேடை தன்னைத் தழீஇச்சிறைக் கரத்துள் ளாக்கி, யன்னமா தரவிற் புல்லு மதுதெரிந் தணங்க ளுர்மேற், பன்னருமாசை கூர விருந்தனன் பரிவுற்றிப்பால். (எச)

வேறு.

பஞ்சணி பதப்பரி புரத்தொலி பரப்ப
நஞ்சன விழிக்கடை குழைக்கய னடப்பக்
குஞ்சர மருப்பினிரு கொங்கைகள் குலுங்க
வஞ்சியென வோர்புலை மடந்தையவ ணுற்ருள். (எரு)

---

(எங) பெண்ணை=பனை; துண்டம்=மூக்கு; வண்டானம்= நாரை; தொழுதிகள்=கூட்டங்கள்; மாவினங்கள் = மிருகவர்க்கங்கள்; ஒண்=அழகிய; தழை=தழைத்த; பால்=பாலின்நிறம்பொருந்திய;மிதுனம்=ஜோடியாகிய; கின்னரம்=கின்னரயட்சி.

(எச) இரும்= பெரிய; தன்னமர்=தனதுவிருப்பத்திற்குரிய; தழீஇ=அணைத்து; சிறைக்கரம்=சிறகாகிய கை; ஆதரவில்=ஆசையினலே;அணங்களுர்=ஸ்திரீகள்;பன்னரும்=சொல்லுதற்கரிய.

(எரு) பதம் =பாதம்; பரிபுரம்=காலிலணியும் ஓராபரணம்; ஒலிபரப்ப=சப்திக்க: நஞ்சு அன =நஞ்சையொத்த; மருப்பின்=கோடுபோன்ற; வஞ்சியென = வஞ்சிக்கொடிபோன்ற; புலைமடந்தை=நீசஸ்திரீ.

மன்றல்கமழ் மாலையணி வார்குழ றனக்கு
மின்றமிழ் மொழிக்குமை விழிக்குமெய் யொளிக்கு
மென்றளி ரடிக்குநிகர் வேறுலகி லொப்புண்
டென்றவ டனக்குவமை யாவர் புகல்கிற்பார். (எசு)

ஏர்மருவு நூனிக ரிடைக்கொடி நுடங்கத்
தார்மருவு வார்குழல் சரிந்திட விரிந்தே
யார்பத மிரங்கவரு மன்னநடை மின்னை
மாரனிக ரானசுகு மாரனெதிர் கண்டான். (எஎ)

பொன்னுலகில் வாழுமட மாதுகொல் பொறிப்பைப்
பன்னக நகர்க்கணுறை பாவைகொல் பசுங்கார்
மின்னவிர் சிலம்பினுறை மெல்லியல்கொ லென்று
வின்னன நினைந்துபி னெழுந்தருகி லெய்தி. (எஅ)

சேயவரி வாள்விழி யிமைத்திடு திறத்தாற்
றோயநில மீதடி மிதித்திடு சுவட்டா
லாயபுவி மீதுவள ரன்னமிவ ளென்னத்
தீயகுண வேதியன் மனத்திடை தெளிந்தான். (எகூ)

---

(எசு) மன்றல் = வாசனை; வார் = நீண்ட; மின் = பிரகாசிக்கும்.

(எஎ) ஏர் = அழகிய; நூல்நிகர் = நூலையொத்த; நுடங்க = துவள; தார் = மாலை; ஆர்பதம் = வண்டு; இரங்க = ஒலிக்க.

(எஅ) பொன்னுலகு = இந்திரவுலகம்; பொறி = புள்ளிவாய்ந்த; பன்னகநகர் = நாகலோகம்; பசுங்கார் = நீருண்டமேகம்; மின் அவிர் = மின்னலைப்போற்பிரகாசிக்கும்; சிலம்பு = மலை; என்று = என்று; இன்னன = இப்படிப்பட்டவைகளை.

(எகூ) சேயவரி = செவ்வரி; இமைத்தல் = சிமிட்டுதல்; நிலமீது அடிதோய = பூமியிற்கால்பொருந்தும்படி; மிதித்திடும் = மிதிக்கிற; சுவட்டால் = காலடி வைத்த அடையாளம்தோன்றுதலால்; புவி = மண்ணுலகம்.

மங்குனிற முற்றிடு மடப்பிடியை நாடும்
வெங்கய மெனத்தனி விரைந்துறு னடந்தே
யிங்கெனெதி ருற்றிடுவன் யாவனிவ னென்றுத்
திங்கணிகர் வாணுத றரித்தன டிகைத்தே. (அ0)

ஏமமணி மால்வரை யெனக்குலவு கொங்கை
வேமசனி காலுமுகின் மீதெழு தடித்தின்
வாமமிகு நேரிடை மடந்தையரை வெல்லுங்
காமனிவ னாமென மனத்திடை கணித்தாள். (அக)

உட்புலமை யற்றுமய லுற்றசுகு மாரன்
மட்குட மெனத்திரள் வரைப்புய மிலக்காய்க்
கொட்புற நெரித்தபுரு வச்சிலை குனித்தே
கட்கணை தொடுக்கவிர கக்கடல் குளித்தான். (அஉ)

முளைத்தெரி கனற்கணெய் முகந்துகுவ தென்ன
விளைத்தமரில் வென்றிபுனை வேள்கழையி னீள்வில்
வளைத்துமண மேவுமலர் வாளிக டுரந்தான்
துளைத்தவ னுரத்தினிடை தூவலள வாழ. (அங)

---

(அ0) மடம் = இளமை; பிடி=பெண்யானை; வெங்கயம் = கொடியஆண்யானை;தனி=தனிமையாக; உற்றிடுவன் =வருகிறவன்; தரித்தனள்=நின்றாள்.

(அக) அணி =அழகு பொருந்திய; ஏமமால்வரை=பெரிதாகிய மேருமலை; என=என்றுசொல்லும்படி; குலவு = விளங்கும்; வேம்அசனி=வெப்பமுடையஇடியை; காலும் = உண்டாக்குகிற; தடித்தின் = மின்னலினை; நேர்=ஒத்த; வாமமிகும் இடை = அழகுமிகுந்த இடுப்பு; கணித்தாள்=எண்ணினாள்.

(அஉ) உட்புலமை= உள்ளறிவு; வரை=மலையனைய; மட்குடம்என—மண்குடம்போற் றிரண்ட; கொட்புற=வளைவுற; நெரித்தபுருவம்=மேலேறும்படி செய்தபுருவம்; குனித்து=வளைத்து;கண்கணை=கண்ணாகிய அம்பை; தொடுக்க=எய்ய.

மெய்வசமீழிந்துதழன் மீதின் மெழு காகிப்
பொய்வசன மன்றிது புலங்கொளுதி பொன்னே
உய்வதரி தாமுயி ருலந்துபடு முன்னுன்
கைவச மெனுவிவை கரைந்தன னிரங்கி. (அச)

இக்குவளை வார்விலி னிருந்திமத னேவு
மக்குவளை வாளிவரு மென்றுமன மஞ்சேன்
மிக்குவளை மீதுலவி மீளுநின் முகத்தின்
மைக்குவளை தானருள் வழங்கலுறின் மாதோ. (அரு)

நீரமுறு வேலைவரு செய்யதுவர் வாயி
னாரமுறு வாணில வரும்பிடி னனுத்தான்
கோரமுறு மாரழ லெனக்குட திசைக்க
ணீரமுறு வாணிலவு தென்செயு மெழுந்தே. (அசு)

---

(அங) முளைத்து = தோன்றி; முகந்து = மொண்டு; உகுவது = சொரிவது; அமர்விளைத்து = காமப்போரையுண்டாக்கி; கழையின் = கரும்பினாலாகிய; வாளி = அம்பு; துரந்தான் = எய்தான்; உரம் = மார்பு.

(அச) புலங்கொளுதி = கேட்பாயாக; பொன்னே = இலக்குமிபோன்றவளே; உன்கைவசம் உயிர் = எனது உயிர் உனக்கு அடைக்கலம்; எனு = என்று; இவைகரைந்தான் = இவைகளைச்சொன்னான்.

(அரு) இக்கு = (இட்சு) கரும்பு; வளை = வளைந்த; விலின் — வில்லினிடத்தில்; அம்குவளைவாளி = அழகிய நீலோற்பல மலரம்பு; மிக்கு = (மேன்மை) மிகுந்த; வளைமீதுலவி = வள்ளைக்கொடிபோன்ற காதினளவுஞ்சென்று; (வள்ளையென்பதை வளையெனல் இடைக்குறையாம்) மை = கறுத்த; குவளை = குவளைமலர்போன்ற கண்.

(அசு) நீரமுறு = கரையையுடைய; வேலைவரு = சமுத்திரத்திலுண்டாகும்; துவர் = பவளம்; ஆரம் = முத்து; வாள் = ஒளிபொருந்திய; நிலவு = பற்கள்தோன்ற (ஆகுபெயர்); அரும்பிடில் = நகையுண்டானால்; கோரம் = அச்சம்; குடதிசை = மேற்குத்திக்கு; ஈரம் = குளிர்ச்சி.

கூடவிணை யாகவளர் கும்பமுலை யென்னு
மாடன்மத மால்களிறெ னங்கைவச மாறு
னீடனுவ ணக்கியமர் நித்தமுமி யற்றும்
வேடனுயர் வேழமதை வேறன்மிகை யன்றே. (௮௭)

தூயகுமு தத்திறொடு தொண்டைதுவ ரொக்கும்
வாயினித ழுற்றகுடி நீரது வழங்கிற்
காயமுட னத்திகள் கனற்றிவரு பித்த
மேயவிர கப்பெரிய வெப்பவியு மெற்கே. (௮௮)

என்றலை மருட்டுகுழ லுக்கினைய கூறித்
துன்றலை கடற்படு துரும்பினிலை யற்றோன்
மன்றலை மிகக்கமழ் மலர்க்கர மெடுத்துத்
தன்றலை குவித்திரு சரண்டொழுது நின்றான். (௮௯)

மம்மருற வேள்கணை வருத்தமய லென்னு
மம்மகர வாரிதி யடக்கலரி தாகி
விம்மமன மீதது வெளிப்படைசெய் வாளாய்ப்
பொம்மன்முலை யாள்சிறிது புன்னகை புரிந்தாள். (௯௦)

---

(௮௭) கூட = நெருங்க; ஆடல் = கொல்லுந்தொழில்; நீள்தனுவணக்கி = நீண்டவில்லைவளைத்து; வேள்தன்வேழம் = மன்மதனது யானை (அஃதாவது இரவு); வேறல் = வெல்லுதல்; மிகை = பெரிது.

(௮௮) குமுதத்திறொடு = செவ்வல்லிபோன்ற; துவர் = பவளம்; இதழ் = அதரம்; காயமுடன் = உடலோடு; அத்திகள் = எலும்புகளை; கனற்றல் = எரித்தல்; பித்தமேய = பித்தம் பொருந்திய; வெப்பு = உஷ்ணம்.

(௮௯) அலைமருட்டும் = அலையைமயங்கச்செய்யும்; குழல் = கூந்தலுடையாள் (பெண்); இனைய = இவைகளை; துன்று = பொருந்திய; துரும்பின் = துரும்பைப்போல; சரண்தொழுது = பாதத்தில் வணங்கி.

(௯௦) மம்மர் = மோகமயக்கம்; மயல் = விரகம்; அம்மகரவாரிதி = முதலையையுடைய அழகியகடல்; விம்ம = பொங்க; பொம்மல் = பருமன்.

செம்பவள வாயிதழ் திறந்தெயி றிலங்கக்
கும்பமுலை யாண்முறுவல் கொண்டகுறி கண்டே
வெம்புதழ லொத்தவிர கத்தினின் மிகுத்தோ
னம்புய மலர்க்கணயவ ளங்கைமலர் பற்றி. (௯௧)

ஏகமன மாகியிரு வோருமெவ ராலும்
போகவரி தாகுமொர் பொதும்பரிடை புக்கு
மேகநிற மானபிடி யுங்கரட மேவு
நாகமு மெனக்கலவி நன்னல நுகர்ந்தே. (௯௨)

வேறு.

இன்றளவு மன்றுடல மெத்துணைநா ளினியிருக்கு, மன்றளவும் பிரியாம லிருப்போமென் றலராத, மென் றளவ முகைநகையும் வேதியனு மிசைந்து தம்மிற், புன் றசைகண் முடைகமழும் புலைப்பாடி தனிற்புகுந்தார்.

தரைபயிலான் பசும்பச்சை தனைக்கவ்வி யிசித்து கஞந், குரைமுகநாய்ச் சிறுபறழின் குறுங்கழுத்தி னெடுங்கயிற்றுற், சுரைபடர்நீள் புற்குரம்பை துன்று கரும் புதல்வர்பிணித், தரையினசைத் திடுசதங்கை கறங்கிட வீர்த் தாட்டயர்வுார். (௯௪)

---

(௯௧) இலங்க=பிரகாசிக்க.

(௯௨) பொதும்பர்= சோலை; புக்கு=புகுந்து; பிடி=பெண் யானை; கரடம்மேவு=மதம்பொருந்திய; நாகம்=ஆண் யானை.

(௯௩) தவளம்= முல்லை; முகை=அரும்பு; தசைகள்=மாமிச ங்கள்; முடை=துர்நாற்றம்; கமழும்=வீசும்; புலைப் பாடி=பறைச்சேரி.

(௯௪) தரைபயில்= தரையில் வசிக்கிற; ஆன்=பசுவினது; பசு ம்=உலராத; பச்சை=தோல்; உகளும்=ஓடும்; முக ம்=வாய்; நாய்ச்சிறுபறழ்=நாயின் சிறியகுட்டி; துன் று=வசிக்கிற; கரும்புதல்வர்=கருநிறம்வாய்ந்தபிள்ளை கள்; பிணித்து=கட்டி; அசையின்=இடுப்பின்; கறங் கிட=சப்திக்க.

அணை திரைசுகன் மணிவரன்றி யார்த்திடுமார் கலி யமிழ்திற், கிணைபுகல்மென் மொழிபயிலா விளங்குழவி பசிக்கிரங்கித், துணைமுலைப்பால் சுரந்தருத்தித் தோற் பாய றனிற்றுயிற்றிப், பிணைவிழிப்புன் புலைமகளிர் தா லாட்டு மிசைபெருகும். (கூ௫)

பிறங்கியபுன் மாலைகளிற் பெருங்குடம்பெய் பிழி பருகிக், கறங்குபறை முகத்தறைந்து களித்தாடிக் களை த்துவிழுந், துறங்குபறைப் புருடர்துயி லொழிந்தெழு வான் புலரிதனின், மறங்குலவு முட்படைக்கால் வார ணங்க ளோலமிடும். (கூ௬)

இத்தகைய புலைச்சேரி தன்னிலிருந்திருண்டமன, மத்த னெனப் புலவுதின்று மதுப்பருகி வசமழிந்து, முத்தநகைப் புலைமகடன் முலைநலத்தே றலுநுகர்ந்து, சித்தமிகக் களிகூர்ந்து சிலவைகல் கழித்ததற்பின். (கூ௭)

பங்கயக்கட் புலைமகளாற் பன்னமெனப் பகர்வயிற் றுச், செங்கணிகழ்மழவிடைபோற் செனித்துதித்தார்

---

(கூ௫) அணை= மோதும்; வரன்றி=வாரி; ஆர்கலி=சமுத்திர ம்; பாயல்=பாய்; பிணை=பெண்மான்.

(கூ௬) பிறங்கிய= விளங்கிய; புல்=சேருகின்ற; பிழி=மது (கள்); கறங்கு=ஒலிக்கும்; பறை=தம்பட்டம்; உறங் கு=தூங்கும்;பறைப்புருடர்=ஆண்பாற் பறையர்கள்; புலரி=விடியற்காலம்; மறம்—வீரம்; முள்படை=மு ள்போன்ற நிகமாகிய ஆயுதத்தையுடைய; வாரணம்= கோழி.

(கூ௭) மத்தன்= மயக்கமுடையவன்; புலவு=மாமிசம்.

(கூ௮) ஆல்பர்ணம்= ஆலிலை; மழவிடைபோல் = இளங்காளை போல; பிசிதம்=மாமிசம்; அருத்தி=ஊட்டி; அருத் தியின்=ஆசையோடு; பங்கம்=அலை.

சிறுவனாவ, ரங்கவர்க்கு மதுப்பிசித மருத்தியருத் தியின்வளர்க்கப், பங்குமிகும் கடற்புவியிற் பாதகமைந் தெனவளர்ந்தார். (கூ௮)

மன்னுநெடும் பொதியவரை மன்றல்கமழ் தென் றலுடன், பன்னுதமிழ் பயந்ததெனப் பண்ணவர்பற் பலர்பயிலும், பொன்னுலகி லரம்பையுருப் பசிநிகராம் பொற்பினுடன், பின்னுமிரு கன்னியரைப் பெற்றும னப் பிரியமுற்றான். (கூகூ)

மறமறலியையவரெ ன வளருமைந்து மைந்தருடன், கறைவடிவாட் படைகதைகூர்ங் கணைநெடுங்கார் முகந் தாங்கி, யறைதருபே ரடவிகளி லாறலைத்துப் பொருள் கள் வவ்விச், சிறைபடுநீர்க் கயல்கவர்ந்த சிரலையெனக் கடிதகல்வான். (௪௦௦)

அந்தணரெண் ணிலர்குழக்கன் றானிடப மனவிற ந்த, கொந்தவிழ்நாண் மலர்க்கோதைக் கோதையர்கள் குதலைமொழி, மைந்தர்நரை முதிர்விருத்தர் வருந்துற வர் வருந்துறக்கொல், விந்தவிதக் கொலைகடம்மை யா வர்கணித் தெடுத்துரைப்பார். (௪௦௧)

---

(கூகூ) பண்ணவர்=தேவர்; பயிலும்=தங்கும்; பொன்னுலகம் =விண்ணுலகம்.

(௪௦௦) மறமறலி=வீரம் பொருந்திய இயமன்; கறை=இரத்த க்கறை; வாள்படை = வாளாயுதம்; கதை = தண்டு; கணை=அம்பு; நெடும் கார்முகம்=நீண்டவில்; அறை தரு=சொல்லப்படும்; ஆறலைத்து=வழிப் பறிசெய்து; வவ்வி=அபகரித்து; சிறைபடுநீர்=கரையினது காவலி னுள்ளடங்கிய சலம்; சிரலை=மீன்குத்தி,

(௪௦௧) குழக்கன்று=இளங்கன்று; ஆன்=பசு; மலர்க்கோதை =மலர்மாலை அணியும்; கோதையர்கள் = ஸ்திரீகள்; வரும்துறவர்=வருகின்ற துறவிகள்;வருந்துற=துன் புற; கொல்=வருத்தும்.

புக்குபுனற் றடங்கரையிற் புரிதருகண் ணியிற்ப டுத்துத், தொக்கநெடுங் கயலிரைதேர் தோலடிப்புட்டு வர்முட்டாண், மிக்குயர்வண் டானமுடன் விரிந்தசிறைப் பெரும்போதாக், கொக்குமுதற் பக்கிகளைக்கொன்று கொன்று தின்று பின்னும். (கoஉ)

மேவிவளர் வனங்கடொறும் வில்வணக்கி விறற் பகழி, தூவிவெருவொடுகுதித்துத் துள்ளுபுள்ளி மானினங்க, டாவியுகளிரலையுரற் றலைக்கேழன் மரைக்குலங்க,ளாவிசெகுத்தானருந்தி யடுபுலிபோற் றிரியுமந்நாள்.(கoங)

விரிந்தகொடு வினைவசத்தான் மெயிற் பிணிகள் பிடித் தலைத்துப், புரிந்தசுரு ளிருளோதிப் புலைமகள் பொன் றிடப்புலம்பிப், பரிந்தனலின் மெழுகாகிப் பற் பலநாட் பயில்பெடையைப், பிரிந்தவன்றிற் சேவலெனப் பெருந்துயரக் கடல்வீழ்ந்தான். (கoச)

---

(கoஉ) புனல்தடம்கரையில் புக்கு=விசாலமாகிய நீர்க்கரையில் போய்; புரிதரு=முறுக்கப்பெற்ற; கண்ணி=புள்படுக்குங்கயிறு; படுத்து=சிக்கச் செய்து; தொக்க=அங்கு சேர்ந்திருக்கிற; கயல் இரைதேர்=கயல்மீனை இரையாகத்தேடும்; தோலடிப்புள்=கால்விரல்களுக் கிடையில் தோல்விரவியபட்சிகள்; துவர்=செகப்பு; முள்தாள்= முள்ளைப்போன்ற நகமுடையகால்; வண்டானம்=நாரை;பெரும்போதா=பெருநாரை; பக்கி=பட்சி.

(கoங) வில்வணக்கி=வில்லைவளைத்து; விறல்=வலிமைபொருந்திய; பகழி=அம்பை; தூவி=எய்து; வெருவொடு= அச்சத்தோடு; தாவிஉகள்=தாண்டிக்குதிக்கும்; இரலை =கருமான், அல்லது கலைமான்; உரல்தலைக்கேழல்= உரல்போன்ற தலையினையுடைய பன்றி; செகுத்து= கொன்று.

(கoச) புரிந்தசுருள்=பின்னிச்சுருட்டிய; இருள்=இருள்போற்கறுத்த; ஓதி=ஸ்திரீகளின் கூந்தல்; பொன்றிட = இறக்க; பயில்=பழகிய; அன்றில்=அன்றிற்பட்சி; சேவல்=கோழி.

எழுமிபங்கு முளங்கீதரு மேதங்குமுடற் பொறை சோர்ந்து, விழுமிருகட் புனல்குமிழி விட்டோட விம்மி விம்மி, யழுமசனிக் குடைந்துபுர ளரவெனநீ ணிலந்தலையா, லுழுமிரங்கும் வெதும்புறுநெட் டுயிர்ப்புயிர்த்துப் புழுங்கிடுமால். (கoடு)

கண்மணியே யெனதாசைக் கங்குல்விடிந் திடவுதித்த, விண்மணியே யிப்பியின்வாய் விண்டுமிழும் வெண்டாளத், தண்மணியே பாற்சலதி தருமமுதே தயங்குகதி, ரொண்மணிநீத் திடுமரவி னுனையிழந்து முய்வேனோ. (கoசு)

துப்புறழ்செவ் வாயிதழுந் துடியிடையுங் கடிதடமும்
மைப்புருவக் கார்முகமு மதிமுகமு மிருவிழியும்
கொப்புலவு மிருகுழையுங் குருகுலவு கரத்தழகு
மெப்பிறவிப்பிறந் துனைநா னினிக்காண்ப தென்றபரும்.

ஓங்கினைய பெருந்துயர முழந்துமிக வருந்துமந் நாட், பூங்கமலக் குறுமுகைபோற் புடைத்தரும்பிக் குமிழ்த்தெழுந்து, கோங்கமுகை யெனக்குலவக் கொங்

(கoடு) உடற்பொறை = தேகச்சுமை; அசனிக்கு = இடிக்கு; உடைந்து=பயந்து; புரள் அரவென= புரளும் பாம்பைப்போல; நீள்நிலந் தலையா லுழும்=தலையைப்பூமியில் தேய்க்கும்; நெட்டுயிர்ப்பு உயிர்த்து=பெருமூச்சு விட்டு.

(கoசு) விண்மணி=சூரியன்; இப்பி=முத்துச்சிப்பி; சலதி= கடல்; தயங்கு = விளங்குகிற; கதிர் = பிரகாசிக்கும்; ஒண்மணி=அழகிய இரத்தினத்தை; நீத்திடும்=இழந்த; அரவின்=பாம்பைப்போல.

(கoஎ) துப்பு=பவளம்; வாயிதழ் = உதடு; துடி = உடுக்கு; மைப்புருவம்=கறுத்தபுருவமாகிய;கார்முகம்=வில்லை; குருகு=வளையல்.

கைகளங் கவனளித்த, மாங்குயிற்சொல் வியர்வீரக மருவுமங்கைப் பருவமுற்றார். (கoஅ)

மாரிவளந் தருமுகிலே மணிக்கருநீ னிறமணலே, வேரிகமழ் செழுந்துணர்கள் விளங்கிதழிக் கருங்கனியை, நீரிலெழுஞ் சைவலத்தை நிகர்த்துநெய்த்து நெறித்திருண்ட, காரிருளின் பிழம்பென்னக் கவின்கொண்ட கருங்குழல்கள். (கoகூ)

கஞ்சநெடுங் கயல்கமழுங் காவிபிணை கணைக்கிணையா யஞ்சனந்தோய்ந் தடலனங்க னகமங்கற் றலைகடவி னஞ்சமுதங் கலந்திலங்கு நகுமணிப்பொற் குழைகிழித்து வஞ்சமிகுங்கொலைபயின்றுமதர்த்தனவால்வரிவிழிகள்.

கன்னியர்களின்னணைநற் கலைவளர்ந்த மதியமொப்பத், துன்னியமுட் டாட்கமலத் தூயமுகை முறுக்குடைந்து, மன்னியமென் றோடவிழும் பதநோக்கி மதுநுகர்வா, னின்னிசைப்பூம பொறிச்சுரும்ப ரிருந்தகெனை விருந்தவனும். (ககக)

---

(கoஅ) ஓங்கு = மிகுந்த; குறுமுகை=அரும்பு; குமிழ்த்து= எழுந்து; கோங்க முகை=கோங்கின் அரும்பு.

(கoகூ) மணிக்கருநீல் நிறமணலே=அழகியகருநீல நிறம்பொருந்திய மணலே; வேரி=வாசனை; இதழிக்கருங்கனி=கறுத்த கொன்றைப்பழம்; சைவலம்=கொடிப்பாசி; நெய்த்து=தைலப்பசை பொருந்தி; நெறித்து = இடையிடையே சுருளலுற்று.

(ககo) நெடுங்கயல்=நீண்ட கெண்டைமீன்; காவி=கருங்குவளை; பிணை=பெண்மான்; கணைக்கு=அம்புக்கு; இணையாய்=ஒத்ததாய்; அடல்=வலிமை.

(ககக) தோடவிழும் = இதழ்விரிகிற; பதம் = காலம்; பூம் பொறி=அழகியபுள்ளியுடைய; சுரும்பர்=வண்டு.

செக்கரெழு மிளமதியுத மதன்றனுமன் றிலும்ப
கைப்பக், கைக்கணைகொண் டடர்ந்துமதன் கடும்பூசல்
பொரக்கனலின், மிக்கொடுங் காமமெனும் விடந்தலைக்
கொண் டாற்றிலனாய், மக்களிரு வரையுமன மருண்டு
மணே யெனமணந்தான். (௧௧௨)

பெருவரைபோ லகன்மார்பிற் பிறங்கியபொற் சுண
ங்குபொடித், திருவளைக வொனவளரு மிளமுலைக்கோ
டுழுதுழக்கப், பொருவருமா தரவினுடன் புணர்ந்துநல
னுகர்ந்திடுநாண், மருவருபூங் குழலிபரு மைந்தரிரு வ
ரைப்பயந்தார். (௧௧௩)

தரைமிசைத்தன் புதல்வியர்க டாமீன்ற தனையரி
ரு, வரையுமன மகிழ்ந்தெடுத்து மடிமீது வைத்துமுறி,
திரையெறிவா ரிதிபிறந்த தெள்ளமுதக் குதலைகள்கேட்,
டுரைதருவெண் ணுரைச்சுரையூ னூட்டி வளர்த்துவா
றுற்றான். (௧௧௪)

வேறு.

இவ்வண்ண மிங்கிவன்றா னிருந்திடுநாட் பசும்பு
ரவி யிரவிதன்னை, மைவண்ணப் பாந்தள்பகு வாயினிற்

(௧௧௨) செக்கரெழும்=சிகப்புத் தோன்றும்; கடும்பூசல்பொர
=கொடியயுத்தஞ்செய்ய; மருண்டு=மயங்கி.

(௧௧௩) பொடித்து=தோன்றி; கோடு=மலைச்சிகரம்; உழுது
உழக்க=குத்தியுரஞ்ச: ஆதரவு=விருப்பம்.

(௧௧௪) தனையர்=புதல்வர்; திரையெறி = அலைவீசும்; உரை
தரு = சொல்லப்படுகிற; நுரைச்சுரை = நுரையை
யுடைய கள்.

(௧௧௫) பசும்புரவி=பச்சைக் குதிரை; மைவண்ணம்=கருமை
நிறம்பொருந்திய; பாந்தள்=பாம்பு (இராகு); பகு=
பிளந்த; வாயினிற்பெய்து=விழுங்கி; செவ்வண்ணக்
கனகம்=செம்பொன்; செருத்தல்=மடி; நல்லான்=
பழுதகன்ற பசு; கொய்வண்ணம்=பறிக்கப்பெறுந்தன்
மைபெற்ற; கோதை=மாலை, கோமகன்=அரசன்.

பெய் துமிழ்காலை மறையோர்க் கெல்லாஞ், செவ்வண் ணக் கனகமுதற் கலைமுலைப்பாற் றுரைவிடுஞ் செருத் துனல்லான், கொய்வண்ண மலர்க்கோதைக் கோமகன் றுன் றுனமிகக் கொடுப்பவாங்கி. (௧௧௫)

வந்தநல்லந் தணர்கடம்மை வனச்சரியின் மறித் தருத்து மைந்தரோடுங், குந்தநெடுங் கதைவடிவாள் கொடுமரஞ்சா யகங்களினுற் கொடிறு தந்தஞ், சிந்தவு டற் செதுக்கைசெய்து கலக்கியவர் கைப்பொருள்கள் சேர வவ்வி, வெந்தழலார் விழித்தறுகண் மிருகாரியெ னத் தனதின் மேவினனே. (௧௧௬)

பல்லொடிந்து கவுளொடிந்து பழுவொடிந்து முழ வெழுவிற்பணைத்த திண்டோட், கல்லொடிந்து கரமொ டிந்து காலொடிந்து மார்பொடிந்து கலங்கிவாயிற், சொ ல்லொடிந்து பனவரெல்லாம் பகைத்திமிரந் துடைத்தி லங்குஞ் சுடர்வேன் மன்னன், செல்லொடிந்துமுடிதவ ழுங் கோயில்வா யிலைநோக்கிச் சென்றனன்றே. (௧௧௭)

---

(௧௧௬) வனச்சரியின்=காட்டுப் பாதையில்; குந்தம்=சூலாயு தம்; நெடுங்கதை=நீண்ட தண்டாயுதம்; கொடுமரம்= வில்; சாயகம் = அம்பு; கொடிறு=கன்னம்; செதுக் கைசெய்து=வெட்டி; கலக்கி=கலங்கச்செய்து; தறு கண்=அஞ்சாமையுடைய; மிருகாரி=சிங்கம்; தனது இல்=தனது வீடு.

(௧௧௭) கவுள்=கன்னம்; பழு=முதுகெலும்பு; முழவெழு= மத்தளம்போற் புடைப்புற்ற; திண் தோள்கல் = கல் லைப்போன்ற வலிமையுற்றபுஜம்; சொல்லொடிந்து= பேச்சற்று; பனவர் = பிராமணர்; திமிரம் = இருள்; செல் = மேகம்; ஒடிந்து=பிளவுபட்டு; கோயில் = அரண்மனை.

சென்றுமுறை யோமுறையோ வென்றசொற்றி ண் டிறல்வேந்தன் செவியிற்கேட்டுக், குன்றுறழ்கோ புரவாயிற் காவலரைக் கூயவரைக் கொணர்மி னென் னப், பொன்றுயிலு மணிமார்ப னரசிருக்கு மண்டபத் திற் புகுத்தப்போனார், கன்றுமனத் துடனவர்தங் காய முறுங் காயமெல்லாங் கண்ணிற் கண்டான். (ககஅ)

யாவரிது செய்தனரிங் கெனவினவ நீயெமக்கீண் டீந்ததெல்லாம், பாவநெறிச் சண்டாள னொருவன்மை ந்த ருடன்மறித்துப் பறித்துக்கொண்டே, யாவவென வளைத்தடித்திட் டாயுதத்தா லவஞ்செய்தெமை யடர்த் தானென்னக், காவலன்வா யிதழ்துடிப்பக் கட்டழல்கா ன் றொருகைமற்றைக் கையிற்றுக்கி. (ககக)

முன்னின்ற முடங்குளைவான் மடங்கனிகர் படை த்தலைவர் முகத்தை நோக்கி, மின்னின்ற விறற்றானைக் கரத்தானை சிலகொடுபோய் விளங்கு செங்கே, ழென்

(ககஅ) திண்திறல்=மிகுந்தவலிமை; கூய்=கூப்பிட்டு, பொ ன்=இலட்சுமி; துயிலும்=தங்குகிற; மணி=அழகிய; கன்று=கன்றிய.

(ககக) ஆவ என=தமக்குரியனவென்று; அவம்=தீமை; அட ர்த்தான் = வருத்தினன்; கண்தழல் =கண்ணினின் றும் அக்கினியானது; கான்று=வெளிப்பட்டு.

(கஉ0) முடங்கு=வளைந்த; உளை=பிடரிமயிர்; வான்=பெரிய; மடங்கல்=சிம்மம்; மின்=ஒளி; நின்ற=பொருந்திய; விறல்தானை=வெற்றிபொருந்திய ஆயுதத்தைத் தரித் த; கரம் = கையினையுடைய; தானை = சேனைகளை; செங்கேழ்=சிவந்த நிறமுள்ள; எல்=ஒளி; நின்ற= பொருந்திய; கதிர்=கிரணங்களை; குடதிசை=மேற் குத்திக்கு; கடல்வாய் = கடலினிடத்து; எய்தும்= அடையும்;கல்நின்ற=கல்லைப்போன்ற.

னின்ற கதிர்சுருக்கி யிரவிகுட திசைக்கடல்வா யெய்து முன்னர்க், கன்னின்ற மனத்தவனைக் கடிதோடிக் கொண்மினெனக் கற்பித்தானே. (கஉ)

ஆயவரும் விரைந்துகதை யாழிசிலை வாளியொள்வா ளயில்வே லேந்திக், காயவருங் கடுமறலி தூதரிவரெனவெருவக் கண்டோர் கானிற், போயவனை முடுக்கர்மரப் பொதும்பர்செறி யடவிதொறும் புழைக்கை வேழஞ், சீயமுய லெண்குபுலி திரிசரிக டுரிவியெங்குந் தேடலுற்றார். (கஉக)

கையரிக்கொண் டிடுஞ்சேனைக் கணங்கண்டு மருண்டுமனங் கலங்கிக்காதன், மையரிக்கண் ணியரோடு மக்களொடு மவ்வனத்தின் மறைந்து வைகி, நெய்யரியிற் றீக்கொண்டு நன்ககற்றும் படிற்றொழுக்க னெடிகளோதை, செய்யரிற்கா னகன்றிரவிற் பற்பலகா வதங்கடந்து சென்ற பின்னர். (கஉஉ)

---

(கஉக) ஆயவர்=அப்படிப்பட்ட சேனைவீரர்; ஆழி = சக்கரம்; ஒள்=ஒளிபொருந்திய; அயில்=கூர்மையாகிய; காயவரும்=கொல்லவரும்; கடுமறலி = கொடிய இயமன்; வெருவ=அஞ்ச; முடுக்கர்=மலைக்குகை; பொதும்பர்=சோலை; செறி=அடர்ந்த; புழை=துளை; சீயம்=சிங்கம்; எண்கு=கரடி; திரி=சஞ்சரிக்கிற; சரிகள்=மலைச்சாரல்கள்; துருவித்தேடி=ஆராய்ந்து தேடி.

(கஉஉ) கை=கையினிடத்து; அரி = ஆயுதத்தை; கொண்டிடும் = தரித்துக் கொண்டிருக்கும்; சேனைக்கணம்=படைக்கூட்டம்; மருண்டு=பயந்து; வைகி=தங்கி; நெய்யரியில்=பன்றுடையை; தீக்கொண்டு=கொளுத்திக்கொண்டு; படிற்றொழுக்கன்=வஞ்சகனாகிய சுகுமாரன்;நெடிகள்=செள்வண்டு; ஓதை செய்யும்=சப்திக்கும்; அரில்=புதரடர்ந்த.

காட்டியசெந் நிறச்சூட்டு வாரணங்கூ யழைப்ப வொற்றைக் காற்றேர் தூண்டிச், சேட்டிளஞ்செங் கதிர்ப்பரிதி கீழ்த்திசைக்க ணுதயவரை சேருங்காலை, நாட்டியநீ வினைக்கொடியோன் பயமூல மாகடந்து நாருக் கின்ப, மூட்டியவூ ணவதேயப் புடையிலொரு வரைச் சார லொளித்திட்டானே. (௩௨௩)

தொல்வினையின் படிநெடிய வரைவனங்க டொறு முழன்று தொடர்ந்து கானிற், பல்வினையம் புரிந்துவழி மறித்திரலை முயலுடும்பு பன்றி மான்கள், கொல்வினையஞ் செய்துகடுங் கொடுங்கூற்ற மிவனெனப்பேர் கொண்டுநாளு, நல்வினைய மொன்று மின்றித் தீவினையேயும் படச்செலுத்தி வாழு நாளில். (௩௨௪)

அவ்வரையி னெடுஞ்சாரற் கரைக்காதத் தளவை யின்மா லயன்புத்தேளிர், தெவ்வரைவென் றிடுகுலிசப் படையோன்மா னுடரெவருந் திரண்டுபோற்றக், கைவரையொன் றுரித்தருளுங் கறைமிடற்றுக் கண்ணுதல் கட் கருணை நல்கிச், சைவவரையீ டேற்றுகிற்பான் வீற்றிருக்கு நாகநகர் தானொன் றுண்டால். (௩௨௫)

---

(௩௨௩) காட்டிய=தோன்றிய; தூண்டி=செலுத்தி; சேடு= அழகிய; பயம் மூலம்=பயம் காரணமாக; நாருக்கு இன்பம் ஊட்டிய=மனிதர்கட்கு இன்பத்தைக் கொடுத்த; ஊணவதேயம்=மிலேசசநாடு; புடை=பக்கம்; வரைசசாரல்=மலையின் அடிவாரம்.

(௩௨௪) பல்வினையம்=பலதந்திரம்; இரலை=கலைமான்; கொல் வினையம் = கொல்லுந் தொழில்; கடுங்கொடுங் கூற்றம்=மிகக்கொடிய இயமன்; செலுத்தி=செய்து.

(௩௨௫) காதம்=பத்துநாழிகைவழி; புத்தேளிர் தெவ்வர்=தேவர்கட்குப் பகைவர் (இராக்கதர்); குலிசப்படையோன் =வச்சிரா யுதத்தையுடைய இந்திரன்; கைவரை=யானை; நாகநகர்=நாகநகரம் என்னும் ஒரூர்.

அந்தநகர்ப் பூசுரர்பார்த் திவர்வணிகர் சூத்திரர் முன் னுயினோரும், பந்தணிகைச் சந்தமுலைப் பண்டரு சொற் பைந்தொடியார் பலரும்பானற், கொந்தவிழ் நாண் மலர்வாசங் கமழோடை களிற்குழுமிக் குளிர்நீ ராடிச், சுந்தரஞ்சே ராசார முடுத்தபின்னு சாரமிகு சுத்தராகி. (கஉ௬)

வெய்யகொடும் பாதகங்க ணீறுக்குந் திருநீறு விர வச் சாத்தித், துய்யமணிக் கண்டிகையின் றொடைபு னைந்தஞ் செழுத்தோதித் துலங்குஞ் சோதிச், செய்ய மணிக் குண்டலங்கண் முதலாம்பொற் கலனிலங்கச் செக்கர்மேனி, யையனுறைந் தருடருநா கேச்சுரத்திற் சென்றுதொழு தன்புகூர. (கஉ௭)

வெண்டரளத் தொடைநாற்றி விதானித்து நெய் த்தகளி விளக்குமேற்றி, வண்டமரும் வலம்புரிமா தவி முல்லை மல்லிகைசெவ் வந்திபிச்சி, தண்டளிர்சேர் மண மிகுந்த மந்தாரங் கரவீரஞ் சாதி வாசப், புண்டரிகங் கருங்குவளைப் போதுகடே யருச்சனைகள் புரிந்துபோற்றி.

(கஉ௬) பூசுரர்=பிராமணர்; பார்த்திவர்=க்ஷத்திரியர்; முன் னுயினோர் = முதலாயினோர்; பந்தணி கை= பந்தை யணிந்த கை; சந்தம்=சந்தனம்; பண்தருசொல்=ராகம் போன்ற மொழி; பானல்=நீலோற்பலம்; குழுமி= கூடி; ஆசாரம் உடுத்தபின்=வஸ்திரந்தரித்தபின்; ஆசா ரமிகு=ஒழுக்கம் மிகுந்த

(கஉ௭) விரவ=விளங்க; செக்கர்மேனி=செவ்வானம் போன்ற திருமேனி.

(கஉ௮) தொடைநாற்றி = மாலைகளைத் தொங்கவிட்டு; விதா னித்து=மேற்கட்டுக்கட்டி; தகளி=அகல்; வலம்புரி= நந்தியாவட்டை; மாதவி=குருக்கத்தி; பிச்சி = சிறு சண்பகம்; கரவீரம்=அலரி; சாதி=சாதிமுல்லை; கருங் குவளை=கருநெய்தல்.

பிணியலைப்ப பத்துடைக்குந் தயிரின்மன மறுகிமாழ்கி,
யீட்டுபெரும் பாதகந்தா னிறந்ததெனத் தனதுடனீத்
திறந்திட்டானே. (௧௮௨)

வேறு.

பெரிய வாயரகல் வானினூற்றசிறு பிறையெயிற்றர்
சிகை பெற்றெழுந்,தெரியுநீள்வடவை யொத்தகுஞ்சிய
ரிடித்தசொல்லினர் துடித்துநீர், சொரியுமாரிமுகி லால
காலமிவை தொக்கநீலவரை போக்குமா,கரியமேனியர்
சி வந்தகண்ணினர்கள் காலதூதர்பலர் மேவினார்.

காலமொத்தகர மீதெடுத்தசிலை தண்டுவாளிவளை
சக்கரஞ், சூல மிக்கவடி வாள்சிரத்தொகை துணிக்கு
நீடிய கணிச்சிகூர், வேலழற்கழுமுள் பிண்டிபாலமொடு
வீசு பாசமிவை கொண்டு நீள், வாலசைத்துமிகு புலி
புல் வாயினை வளைத்ததா மென வளைத்தனர். (௧௮௪)

---

(௧௮௨) நெஞ்சில் விருப்பம் காட்டும்=மனதிற்கு இச்சையைக் கொடுக்கும். மறுகி=சுழன்று; மாழ்கி=மயங்கி; உடல் நீத்து=தேகத்தையொழித்து

(௧௮௩) குஞ்சி=குடுமி; இடித்த=இடிபோன்ற; துடித்து=அசைந்து; தொக்க=கூடிய.

(௧௮௪) தாலம்=பனைமரம்; மிக்கவடிவாள்=மிகுந்த கூர்மை பொருந்திய வாள்; கணிச்சி = ஓர்வகைச்சூலம்; கழுமுள்=ஓர்வகைச் சூலம்; பிண்டிபாலம் = யுத்தத்தில் எறிந்துகொல்லும் ஆயுதம்; மிகுபுலி=பலபுலிகள்; புல்வாய்=பசு;

சூலமானது இருகிளைசூலம் முக்கிளைச்சூலம் இருதலைச்சூலம் என்பன முதலியபல பிரிவினையுடையதாயிருத்தலால், இச்செய்யுளில் சூலமெனவுங் கணிச்சியெனவுங் கழுமுள்ளெனவும் கூறினர். இவற்றுள் சூலம், கணிச்சி, கழுமுள் என்பவை இவ்விவ்வகைச் சூலமென இப்பொழுது விளங்கவில்லை.

பற்றி மெல்பர்சிலர் பாவிப்பவிபத றிப்பனைத்தக்க விரி பாறையி, னொற்று மென்பர்சில ரீரநாலத்தனை யிரு மென்பர்சிலர் பகரெனா, முற்றுணர்ந்தோர்கொலை செய்த கால்கர மொடித்திடி ரென்றிவை யுரைத்துமுன், மற்று டம்புய முரிந்து சிந்திட வரிந்து கட்டினர் வருத்தியே (ககரு)

அடிப்பர் பற்பல விலங்கு கொன்றுதசை யன்று மென்றுகனி தின்றபல், லொடிப்பர் பார்புபழு வூடுதைப் பர்கதை போச்சிமேலிட வுரப்பிமே, லிடிப்பர் பாசமது கொண்டு கண்டமதி லிட்டிழுக்கியிரு கையினும், பிடிப பர்கண்ணிணை பிதுங்க விர்த்துநெறி பேருவார் முயலு மெல்லையில். * (ககசு)

வணங்கி முந்திமெதிர் நின்றநந்திதனை வருகவென் றெமது வாயில் வாழ், கணங்கள் சென்றெருக் கணத்தி னெய்தியடு காலதூதர் கொடுபோகுமுன், குணங்கெடா தசுகு மாரனைக்கயிலை கொடுவரச்சடுதி கூறெனைப், பண ங்கொள் பாம்புமதி பாணிசேவணியணி பரமனற்கருணை பண்ணினான். (ககஎ)

போற்றியங்குவிடை கொண்டுவாயிலிடை போந்து நந்திகண நாதர் போய்க், கூற்றினுயிர் குடித்த காலனருள் கூரவந்தசுகு மாரனைத், தேற்றியாதரவு

---

(ககரு) ஈரும்=பிளவும்; மல்தடம் புயம்=மல்லயுத்தஞ் செய யும் பருத்த புஜம்.

(ககசு) பழுவூடு= எலும்பில்; கதைஓச்சி=தண்டைவீசி, மே லிடவுரப்பி=மிக்க அதட்டி; இடிப்பர் = மோதுவர்; இட்டு=போட்டு; நெறி பேருவர்=வழிச்செல்லும்படி; எல்லையில்=காலத்தில். *

(ககஎ) சென்றெய்தி=போய்ச் சேர்ந்து; பணம்=பாம்பின்ப டம்; பாணி=நீர்.

(ககஅ) அருள்கூர=அருள்பெற; அற்பினொடு=அன்பினோடு.

செப்பி யற்பினொடு செம்பொன் மாமணி விமானமீ, தேற்றி யோர் கொடியில் வம்மினீரென வியம்பி யங்க ணுரை யேவினான். (கஙஅ)

நீறணிந்திலகு நெற்றியார்மிக நெடுத்த புன்சடை முடித்துளா, ராறணிந்தருளு மெந்தை சேவடி யகத்தி ருத்திபரு ளன்பினா, ரூறணிந்துவரு முக்குறும்பற வொருக்கி யோசைகள் பெருக்கநற், பேற ணிந்துகிளா ரிரசிதக்கிரி பிரிந்தி டாமலுறை பெட்பினார். (கஙகூ)

தாம மாகமிகு கண்டிகைத்தொடை தரித்துளார் வினை யரித்துளா, ரேமமால்வரை யசைத்தொர் கை யினி லெடுக்கு மற்புய மிடுக்கினார், நாமவேறிகிரி கொ ந்த ழற்கழுமு ணகுக தைப்படைக ணவியமீள், வாம மேவுவடி வாளினோடுதிறன் மலிதூதரிடை மரு வியே. (கசo)

---

(கஙகூ) நெடுத்த=நீண்ட; ஊறு அணிந்து = விக்கினங்களை யுடைத்தாய்; ஒருக்கி=கெடுத்து; ஓசை பெருக்க= கீர்த்தி யதிகரிக்க; நற்பேறு அணிந்து=நல்லபயனை யுடையதாய்; கிளர்=பிரகாசிக்கும்; இரசிதக்கிரி=வெ ள்ளிமலை; பெட்பு=விருப்பம்.

(கசo) தாமமாக=விருப்பமாக; மிகு கண்டிகைத் தொடை= மேலான ருத்திராக்க மாலைகள்; அரித்துளார்=ஒழித் திருக்கிறவர்கள்; ஏமமால்வரை=பெரிதாகிய பொன் மலை; மிடுக்கு = வலிமை; நாமவேல் = அச்சந் தரும் வேலாயுதம்; திகிரி=சக்கரம்; கொந்து=கொத்துகிற; அழற்கழுமுள்=அக்கினியைக் கக்குகின்ற சூலாயுதம்; நகு = விளங்குகிற; கதைப்படை = தண்டாயுதம்; நவியம் = மழுவென்னும் ஆயுதம்; வாமம் = அழகு; திறல்=வலிமை.

விடுமி னிக்கமறை வேதியன்றனை விடுத்திடாவி
டில் விறற்படை, யெடுமி னெட்முட னெதிர்ந்துவெஞ்
சமரியற்றியுங்கல் வலியானைவயும், கெடுமி னங்கமுடி
புயமெ னும்பெரிய கிரியிழந் துயிரை யெமது கைக்,
கொடுமி னென்றுசில வாசகங்க ளெதிர் கூறினார் வலி
மை கூரவே. (கசக)

வேறு.

முனிவர் போன்மிக நீறுபூசி முறுக்கி வேணி முடி
த்துளீர், கிளையி லொரொரு பாதி நீதிகள் செய்திலீ
ரமை வெய்யதீ, யனைய வாய்மொழி பேசிபேசி ய
டர்த்து வன்மை நடத்துவீ, ரினையராயிது செய்த நீரி
வண் யாவ ரேவலி னெய்தினீர். (க•உ)

என்று வன்றிற வியமதூதரி யப்பலுந்தவ ரெ
ன்று மொற், குன்று கொண்டுமுன் முபுரந்தழல் கொ
ள்ள மென்னகை கோட்டி மான், கன்று கொண்டகர
த்தனெதிர் காமனைக்குள விழியழற், கன்றளித்தரு
ளாதி நாயக னன்பர் பின்பிது கூறுவார். (கசங)

துண்ட வான்மதி கங்கை மாநதி சூடிமேற் னிசை
பாடிமா, வண்ட ருமலர் முண்ட காசன மறையவன்

---

(கசக) மறைவேதியன்=வேதத்தினை யோதும் பிராமணன்;
முடி=தலை.

(கசஉ) வன்மை=பலாத்காரம்; இனையராய் = இத்தன்மை
யுடையராய்.

(கசங) தவர்=வில்; குளவிழி=நெற்றிக்கண்; அழற்கு அன்
று அளித்த=முன் நாளில் எரித்த.

(கசச) வண்டு இசைபாடி அரு = வண்டுகளானது ரீங்காரஞ்
செய்து நீங்காது வசிக்கும்; முண்டகாசன மலர்மறைய
வன்=தாமரை மலரில் வசிக்கும் பிரமன்; பொறை=
பாரம்; இம்பர்=இப்பொழுது; எண்தரா = நினைக்கக்
கூடாத

பொறை மண்டல, முண்ட மான்முத லுமபர் மங்குவ
ரிம்ப ரென்பதை யுன்னிமு, னெண்ட ராவிட முண்ட
ர்ாவணி கண்ட மீதி லிருத்தினேன். (கசச)

காலனுருயிர் காலவேயொரு காலினாலுதை செய்
துநீ, டாலமேநிக ரந்தகாசுர னவனைமுத்தலை யயிலின
டுஞ், சூலமேகொடு குத்திமார்பு துளைத்துவானிலு
யர்த்தியோ, லோலமேயென வாவிபாவிபு லக்குமட்டு
முணக்கினேன். (கசரு)

திருக ணாசல மதனை யம்மைதி டுக்கமெய்த வெ
டுத்தவ, னுரிய மாமணி முடிபு னைக்தக மொருப துங்
கர மிருபது, மெரியநாரண னனமாய்முத னேடுபாத
மிரண்டி லோர், விரியுநாண்மல ரடியினாயக விரலழுத்
தி மிதித்துளான். (கசசு)

உறுதி வானவர் மானவர்க் கிடை யீடுறுமல் வில
க்கவுஞ், சிறுமை நீர்தர முத்தி பத்திகள் செய்தவர்க்
கருள் செய்யவு, மறுவி லாமதி போலவால மருப்பு
நெற்றியி னங்கணும், பெறுமதாசல வதனனுமொரு
பிள்ளை பெட்பொடு பெற்றுளோன். (கசஎ)

---

(கசரு) உயிர்கால=உயிர்நீங்க; அயில்=கூர்மை; ஆவி=உயிர்;
உலக்கும்=நீங்கும்; உணக்கினேன் = வாட்டினேன்.

(கசசு) கணாசலம்=கைலைமலை; உரிய=தகுந்த; கம்=சிரசு;
முதல்=முற்காலத்தில்; நாயகவிரல்=பெருவிரல்.

(கசஎ) உறுதி = வயிராக்கிய முள்ள; மானவர் = மனிதர்;
இடையீடு=விக்கினம்; நீர்தர=நீங்க; வால் = வெ
ண்மையுற்ற; அம்=அழகிய; மருப்பு=தந்தம்; நெற்
றியின் அமகண்ணும்=நெற்றியில் அழகியகண்ணும்;
மதாசலம்=மதமுடைய யானை.

நாலுமா மறை யோது நான்முக னாரிநாசி நறுக்கிவந், தாளீ நீடிரை யத்தி யுற்றெழு மர்க்கர் பற்க டகர்த்துநற், சாலு மாமதி விட்டிகற்புரி தக்க னைத்தலை வெட்டிமுற், கோலும் வேள்வி யழித்தி யென்றுரு கோர வீரனை நல்கினேன். (கசஅ)

கொடிய தாரக னுயிரந்தலை கொண்ட சிங்கமுகன்கடற், படியின் மிக்குயர் சூரநீதிசெய் பற்பதானவர் குலமெலாம், வடிகொள் வேல்கொடு கொன்று பொன்றிகழ் வானநாடு புரப்பதற், கடியர்தீவினை யறவருட்டரு மறுமு கத்தனை யருளினேன். (கசகூ)

ஏவயாமிவ ணெய்துகின்றனை மிங்கி வன்றனைவிட்டுநீர், போவதேகட னென்று நின்றுள பொறுமையோடிவை புகலவும், பாவ சாகர மான மானமில் பனவனைப் பல நரகின்வாய், மேவவேவிட வென்றிமீளி கொடாமெனுவலி பேசினார். (கரு0)

---

(கசஅ) நான்முகன் நாரி = பிரம்பாவின் பத்தினி; வந்து= தோன்றிவந்து; ஆலும = சப்திக்கிற; நீள் திரை = நீண்டஅலை; அத்தி=சமுத்திரம்; அர்க்கர்=பன்னிரு சூரியர்; நற்சாலும் = நன்மை பொருந்திய; மா மதி விட்டு=சிறந்த புத்தியையொழித்து; இகல்புரி=(பரமேசுவரனைப்) பகைத்த; முன் கோலும் = முன்னே செய்த.

(கசகூ) கடல் = சமுத்திரஞ் சூழ்ந்த; படியின்=பூவுலகத்தில்; மிக்குயர்=அதிமேன்மை பெற்ற; சூர்=அசுரன் (சூரபத்மன்);அநீதி=அக்கிரமம்; பற்பல=பலபல; தானவர்=அசுரர்; பொன்றிகழ்=பொன்மயமாய் விளங்குகிற; புரப்பதற்கு=காப்பதற்கு.

(கரு0) பனவன்=பிராமணன்; எனு=என்று; வலிபேசினார்= வன்மையாகப் பேசினார்.

மட்டறப்புரி புன்றொழிற்கு மாரனாவலாரப்புயக், கட்ட றுத்தன ருட்க றுத்தனர் கட்கனற்பொறி கக்கவாய், விட்ட மைந்திறழ் பற்கடித்து விடுத்து நேமியெடுத்துவே, றொட்டி லக்கமில் வாளிமாமழை தூவினார்சிவ தொண்டரே. (௧௯௧)

காமு றிந்தனர் வார்கழற்புனை காறுணிந்தனர் கவுளுடன், சிரமுடைந்தனர் சூலவேல்கதை திகிரிகால் வளை சிலைநெடுஞ், சரமிழந்தனர் குடர்சரிந்தனர் சவிகுறைந்தனர் நமதுவென், னுரமெரிந்தனர் தென்புலத்திடை யோடினார்யம தூதரே. (௧௯௨)

வேறு.

படிபுகழ்விஞ் சையர்நரப்புக் கருவிதட விச்சுருதிப் பண்கள்பாட, விடிபொலியின் மிகவதிரு மந்தரதுந் துபிமுழங்க விரண்டு பாலுங், கொடிகுடைகள் பலநிலவக் குலவியநற் கற்பகப்பொற் கோட்டிற் பூத்த, கடிகமழ்பூ மழைபொழியக் கற்றைமணித் திரணெடுங் காற் கவரி வீச. (௧௯௩)

---

(௧௯௧) மட்டு அற=அளவில்லாமல்; ஆரம் = சந்தன விருட்சமடர்ந்த; வரை = மலைபோலும்; உட்கறுத்தனர் = கோபித்தனர்.

(௧௯௨) கால் துணிந்தனர்=காலைவெட்டப் பெற்றனர்; கவுள் =கன்னம்; கால்வளை சிலை=இரு நுனிகளையும் வளைக்கப்பட்ட வில்; சரம்=அம்பு; சவி=பெலம்; வென்=முதுகு; உரம்=மார்பு.

(௧௯௩) படி=உலகம்; விஞ்சையர் = வித்தியாதரர்; நரப்பு=நரம்பு (தந்தி); தடவி=மீட்டி; சுருதி=இசை; பண்=இராகம்; அந்தரதுந்துபி=தெய்வ வாத்தியம; குலவிய=விளங்குகின்ற; பொன்கோடு = அழகிய கிளை; கற்றை=அடர்த்தியான; மணி திரள் நெடுங்கால் = திரட்சியுற்று அழகியநீண்டகாம்பினை உடைய.

நகுமீர நகைக்கருங்க ணாரம்பையர்பல் லாண்டி
சைப்ப நவையிற் றீர்ந்த, சுகுமாரன் றனைக்கவின்செய்
மானமிசை கொண் டணைந்தார் சுரர்கள் போற்றத்,
தகுமார னுடலடலை படவிழித்த தனிநாதற்கட் டலை
வன்னைக்கு, மிகுமாரத் திரள்சாயத் தள்ளிபரு விபவு
னல்பாய் வெள்ளி வெற்பில். (கருச)

பொங்குகதிர் விமானத்தி னின்றிழிந்து நந்திவி
டப் புகுந்துபொற்பார்,மங்குறவழ் வரையரசன் மடப்
பாவை யிடப்பாக மருவத்தான, வெங்கரிக்கூற் றேந
தணையின் விற்றிருக்கும் விமலனைவெண் டிரைகள்
வீசுங், கங்கைநதி முடித்தசடைக் கண்ணுதலைக் கண்
குளிரக் கண்ணுற் றனே. (கருரு)

கறைசெறியுங் கருந்தாதைச் செந்தாதிற் புரிந்த
தன்மை கடுப்ப நீதி, பொறை யறிவொன் றில்லேனை
நல்லறிஞ ருடன்கூட்டிப் புரந்தாய் போற்றி, யிறைய

---

(கருச) நகும்=விளங்கும்; ஆரம்=முத்தைப் போன்ற; நகை=பல்லையும்; நவையில்தீர்ந்த=குற்றத்தினின்று நீங்கிய; மானம்=விமானம்; தகுமாரன்=தகுதியுள்ள மன்மதன்; மிகும்=மிகுதியாகிய; ஆரம் திரள்=சந்தனவிருக்ஷக் கூட்டம்.

(கருரு) மடப்பாவை=அழகிய பதுமைபோன்ற பார்வதிதேவியார்; தானம்=மதம்; கரிக்கூற்றன்=யானைக்குச சத்துருவாகிய சிங்கம்; ஏந்து=சுமக்கும்; அணை=ஆசனம்.

(கருசு) கறை=கறுப்புநிறம்; செறியும்=பொருந்திய; கருந்தாது=இரும்பு; செந்தாது=பொன்; புரிந்த=செய்த; கடுப்ப=ஒப்ப; பொறை=பொறுமை; புரந்தாய்=இரட்சித்தவனே!; எமதுஉரு=எமதுசாரூபம்; அறைதரு=புகழப்படுகிற.

பரம் பரவெனவீழ்ந் திறைஞ்சுதலு மெமதுருப்பெற்
றிருத்தி யிங்ங, னுறைதருநற் கணங்களுட னெனத்திரு
வாய் மலர்ந்தமல னருளிச் செய்தான். (க௫௬)

அக்கணத்திற் சுகுமார னாரனுருப்பெற் றுண்
டிருந்தா னமரிற் றோற்றுக், தெக்கணத்திற் சென்ற
டைந்த தூதர்சமன் றனைத்தொழுது திரைநீ ருண்ட,
மைக்கணத்தி னசனியென்ன வந்தெம்மை யடித்தறி
வின் மறையோன் றனைப்; பொக்கணத்திற் பலியிரப்
பான் கணங்கள்கயி லையிற்கொண்டு போனா ரென்றார். (க௫௭)

கேட்டவுட னிருவிழியுங் கனற்பொறிகான் றிடச
சினமீக் கிளரச் செய்ய, வாட்டடக்கை புடைத்துநன்
றெய் மதிகார மெனப்புநன்று வரைகள்போலுந், தோ
ட்டடங்கள் குலுங்கநக்குச் சித்திரகுத் தனைநோக்கிச்
சுகுமாரன்பா, லீட்டருநற் புண்ணியங்க ளுண்டுகொ
ணீ தெரிந்துவிரைந் தியம்பென் றானல். (க௫௮)

மற்றவனுந் தேர்ந்துசுகுமாரனெனுங் கோரமிகு
மறையோன் றீமை, முற்றுமியற் றித்திரிந்தான் சென்
மமுத லின்றுடல முடியுங்காறு, நற்றவம்புண் ணிய
மொழுக்க மிறையளவு மில்லெனப்பின் னமனுநெஞ்
சிற், செற்றமுட னெழுந்துநதிச் சென்னியான் முன்
னியான் செல்வ னென்றே. (க௫௯)

---

(க௫௭) ஆண்டு=அவ்விடத்தில்; அமர்=யுத்தத்தில்; சமன்= இயமன்; மைக்கணம்=மேகங்களின் கூட்டம்; பொக்கணம்=கபாலமாகிய ஓடு; கணங்கள்=படைகள்.

(க௫௮) மீக்கிளர=அதிகமாகப் பொங்க; செய்ய = அழகிய; வாள் தடக்கை=வாள்பொருந்திய பருத்தகை; புடைத்து=அடித்து; நக்கு=சிரித்து.

(க௫௯) இறை=அணு; செற்றம்=கோபம்.

நிழலுமிழுஞ் சனகக்கிரியி னீலமுகி லிருந்ததனை
நிகர்பப நீண்ட, சுழறருநாக் கண்டைகண்டத் தசைந்
தடிபேர்த் திடுந்தோறுந் தொனிக்கவாந்த, வழலுமிழ்ந்
கட் பெரும்பகட்டின் மிசையேறிக் குறையிறைவநீ
கறைவான் செம்பொற், கழலணிசித் திரகுத்த னுடன்
றாதர் சூழ்வரத்தின் கயிலையெய்தி. (௧௬௦)

அண்ணலுவ ணப்பாக னடலயிரா வதப்பாகனன்
னப்பாகன், பண்ணமர்யாழ்க் கந்தருவர் விஞ்சையர
வா னவர்முனிவர் பலரும்போற்ற, வொண்ணறுமா ம
லர்க்கரத்திற் பிரம்புபற்றிச கற்றிநந்தி யுலவவந்து, வ
ண்ணலுறை பேரவைக்கட் புகுந்தொதுங்கி [illegible]ல்கி
நின்று வழுத்தல் செய்வான். (௧௬௧)

ஆதிநடு விறிலியா யானுடன்பெண் ணலியலவா
யவையுமாகிச், சோதிபெறு மருவுருவாய்த் தோற்றுச
ரா சரமனைத்துந் தோய்ந்துந் தோயாப், பாதிமதிநுதற்
பேதை பாகனுமா யேகனுமாய்ப் பகர்தற்கெட்டாப், பூ
திபுனை திருமேனிப் புனிதநின்றா மரைத்தாள்கள்
போற்றி போற்றி. (௧௬௨)

இத்தலையா ரமுதமெழ வேண்டுமெனப் பாப்புவட
மியாப்புற்றோங்கல், மத்தலையா வமரர்கடைந் திடவட

---

(௧௬௦) நிழலுமிழும் = ஒளிவீசும்; அஞ்சனக்கிரி = நீலமலை; சுழல் தரு = சுழலுகின்ற; நா = நாக்கினையுடைய கண்டை=மணி; கண்டத்து = கழுத்திலே; பகடு= எருமைக்கிடா.

(௧௬௧) உவணப்பாகன் = கருடனைவாகனமாகவுடைய திருமால்; அயிராவதம்=வெள்ளையானை; அவை=சபை.

(௧௬௨) இத்தலை=இவ்விடத்தில்; பாப்பு=பாம்பு; யாப்பு= கட்டு; ஓங்கல்=மலை; அலையா=சுழற்றி; கத்து=சப்திக்கிற; கருதார்=பகைவர்; வேல்=சூலம்.

ணை கருநிறமாய் வந்ததென்னக், கத்தலைவாரிதியுதிக்குங் கடுவொடுக்கு மணிமிடற்றாய் கருதாரூனுண், முத்தலைவேற் கரதாலு மறைபுகழு மைந்துமுக முதல்வா போற்றி. (கசுங)

உலகுயிர் யாவையும் படைத்தற் கயனாகிப் புரந்திடுதற் குவணமூரு, மிலகுமணி மார்பினனாய்த் துடைத்திடுதற் குருத்திரனா யிவையுமன்றி, யலகிறிரு விளையாடல் புரிந்தருளும் பராபரனீ யாதலா லுன், சலசமலர் மருட்டியமிசை வடியடியேன் புன்றலையிற் சாத்தினைனால். (கசுச)

என்றினைய துதிகூறி விழுந்தெழுந்து வாய்புதைத்தங் கெறியும்பாசம், வன்றிறல்சேர் தண்டமுதன் முத்திரையைத் திருமுன்னை வைத்துத் தாழ்ந்து,நின்றினிமே லடியேற்கிவ் வதிகாரம் போதுமென நிகழ்த்தவீச, னுன்றிறம்யா துன்னுளத்தி னுறுகுறையே தெம்முனநீ யுரைத்தியென்றான். (கசுரு)

அரியயனை முதலமரர்க் கடுத்ததொழில் செயப்புரிந்தா யவர்களங்கங், குரியபடி நினதேவற் படிபுரிந்தார் குறையிலரெற் குலகத்துள்ளோர், புரிகொடுந்தீ வினைகளறிந் ததற்கினைய தண்டமெனப் புரிதியென்று, மெரிநரகி னவரவர்கள் வினைகளறிந் தூட்டுவித்தே னின்றுகாறும். (கசுசு)

---

(கசுரு) வன்றிறல்=மிகுந்த வலிமை; முத்திரை=(இயமனுக்குரிய) சின்னம்; திறம்=பட்சம் (விவாதம்).

(கசுசு) ஊட்டுவித்தேன்=அநுபவிக்கச் செய்தேன்.

எம்பெருமா னீபணித்த கற்பனைக டவறிலனீ டி
ஞ்சி யோங்கி, யும்பருல களவளவுங் குஞ்சரநற் புரியி
னிரைத் தொலிக்கு மூந்நீ, ரம்பரவம் பரப்புடவித்
தேவர்குலத் தினிற்றோன்றி யறத்தை நீத்துக், கம்பமி
லா துளத்திரவிற் கலைகலன்பொன் றினந்திருடுங் கள்
வனாகி. (கசுஎ)

விலைமகளி ரல்லார்தங் கற்பழித்து முலைப்போகம்
விழைவிற் றுய்த்துப், புலைமகடோ ணலநுகர்ந்தங் கவ
ருயிர்த்த புதல்வியரைப் புணர்ந்துசாதி, நிலைதவறி யூ
னருந்தி வேதியரா னினமடவார் நீத்தோர் தம்மைக்,
கொலைபுரிந்த கொடுமறவன் சுகுமார னென்றொருபேர்
கொண்டதீயோன். (கசுஅ)

உயிருலக்குங் காலமது கண்டெனது தூதரடைந்
துருத்து நெருஞ்சி, லயிரளவு மிரக்கமின்றிப் பாசமதிற்
பிணித்துவரு மந்தவேலை, மயிருறுசென் னிகண்மூளை
யுகத்தகர்த்து நின்கணங்கள் வலிமைகாட்டிச், செயிரு
டனஞ் சேனையெல்லா முரிந்திரிந்து குன்றவென்றி செ
ய்த பின்னர். (கசுகூ)

---

(கசுஎ) கற்பனை=கட்டளை; அளவும்=அளாவிய, இரைத்து=இரைந்து; மூந்நீர் = படைத்தல், காத்தல், அழித்தலென்னு மூன்று தன்மையுடைய நீர்; அம்பரம் = கடல்; அம்பரப்புடவி=வஸ்திரமாகத் தரித்தபூமி; உளத்து=மனதினிடத்து; கம்பமிலா = கலக்கமில்லாது; கலை=வஸ்திரம்; கலன்=ஆபரணம்.

(கசுஅ) விழைவில் = விருப்பத்தோடு; துய்த்து = அநுபவித்து; நலன்=இன்பம்; உயிர்த்த=பெற்ற; கொடுமறவன்=கொடும்பாவி.

(கசுகூ) அயிர்=சிறுமணல்; உக=சிதற; தகர்த்து=உடைத்து; செயிர்=கோபம்; முரிந்து=தோற்று; இரிந்து=ஓடி; குன்ற=மெலிய.

மைதவழுங் கிரிச்சிறையிர் வச்சிரத்தோன் முதல
மரர் வணங்கி வாழ்த்தச, செய்தவமொன் றில்லானை
நவமணிக ளிழைத்திடும்பொற் றேரிலேற்றிக், கைதவ
மற் றருந்தவங்க ளிழைத்துமிக விளைத்தவர்க்குங் கற்
பஞ்சென்று, மெய்தரிய நினதுபதத் தெய்துவித்தா ரி
துகுறையென் றியம்பிப் பின்னும். (கஎ0)

கனமிருண்டு துளித்தமழைத் தாரைகளைக் கணக்
கிடினுங் கடலின் றீர, வனவரிவா லுகங்கடனை வான்மீ
னைக் கணித்தொருவர் மதித்திட் டாலுந், தினமிவன்
றான்புரிந்தகொடும் பாதகங்கட் கிலக்கமில்லைச் செப்பு
மன்றே, னனவரத தாண்டவநின் பதம்பெறவும் வழக்
குளதோ வறைதி யென்றான். (கஎக)

அந்தகனைக் கடைக்கணித்தங் கரனுரைப்பா னந்
தணரா னினமானோர்கட், பைந்தொடியார் பாலர்வதை
மீன்மிருகம் பறவைகொன்று பகர்தறின்ற, றந்தைகுரு
தாய்பிரம சந்நியாசி சதுர்வேதந் தம்மை நாளு, நிந்தை
செய்த னீதிபிழைத் தொழுகல்பொய்ச்சான் றுரைத்து
நிதி கவர்தலின்னும். (கஎஉ)

கன்னிகைபொற் கலனிழந்த கைம்மைகுரு வின்
றேவி கணிகைதாசி, யன்னியர்பெ ணன்னையவ ளுடன்

---

(கஎ0) மை = மேகம்; சிறையீர் = இறகை யறுத்த; கைதவ மற்று=வஞ்சகமற்று.

(கஎக) கனம் = மேகம்; துளித்த = பெய்த; தீரம் = கரை; வனம்=அழகிய; அரி=ஒளியுள்ள; வாலுகம்=வெண் மணல்; வான் மீன்=ஆகாய நட்சத்திரங்கள்; அனவரதம்=சதாகாலம்.

(கஎஉ) பகர்தல்=விற்றல்; பிரம்ம சந்நியாசி=பிராமண சந்நியாசி; பிழைத்து=தவறி; சான்று=சாட்சி; கவர்தல்= பலாத்காரமா யெடுத்துக்கொள்ளுதல்.

பிறந்தார் தம்புதல்வி யன்றிமாமன், பன்னிசகோதரி தூரத் திரியுடனே பதிவிரதை பழிக்குஞ்சாதி, பின்னி டையார் தமைக்கூடன் மிருகங்க டமைப்புணர்தல் விர தம்வீடல். (கஎங)

குளங்கூபநந்தவனங் கோயின்மடங் களைச்சிதைத் தல் குதிரையானை, யளந்திடுமென் வெண்ணெய் நெய் பொன் னுபயகோமுகிதான மாகவாங்கல், வளர்ந்த பெருமரங்கடமைத் தறித்தன் முகைவிரியாத மலரைக் கொய்தல், விளங்குசிவாலயத்தீர்த்தங் களின்மலமூத்தி ரம்விடுதல் விளம்பி வற்றில். (கஎச)

மனமறிய வுச்சிட்ட மிடல்கனகந் திருடல் கள்ளு ண் மதித்துவிற்குஞ், சொனகுலரூண் சூதகவிட்டனம் பிதிர்போசனந்தூர்த்தர் சோறுதின்றல், தினகரனை யராத்தீண்டு நாளேகாதசிதசமி திகழுவாவி, லனமரு ந்த விடக்கரத்தா லெடுத்தொன்றை யயிறலுஞ் சாரஞ் செய்தல். (கஎரு)

---

(கஎங) பொற்கலன் = திருமங்கல்யம்; கணிகை = விலைமாது; தாசி = ஆலயப் பணிவிடை செய்பவள்; பழிக்குஞ்சாதி = பறைச்சாதி, விரதம் வீடல் = விரதந் தவறுதல்.

(கஎச) கூபம் = கிணறு; சிதைத்தல் = அழித்தல்; உபயகோமுகி = இருபுறமுந் தலையுள்ளபசு, அஃதாவது வயிற்றினின்றுங் கன்றின் றலைமாத்திரம் வெளிப்படுங் காலத்திய பசு.

(கஎரு) உச்சிட்டம் = எச்சில்; சொனகுலர் = சொன்ன குலத்தவர்கள்; ஊண் = சாப்பாடு; பிதிர்போசனம் = அன்னசிரார்த்தத்தில் பிதிர்த் தேவதையாகப் பாவித்த பிராமணர்களுண்ட மிச்ச அன்னத்தை யுண்ணல்; தூர்த்தர் = காமுகர்; தினகரனை அராத்தீண்டுநாள் = சூரியகிரகணகாலம்; அயிறல் = உண்ணல்.

துள்ளுநடைப் பரிமுலைபால் சுரந்தொழுகு செரு
த்தனல்லான் சுருதிதூயோர், விள்ளுமுருத் திரமணிமந்
திரந்தேவ விக்கிரகம் விபூதி யேகங், கொள்ளுமத கரி
படிமை பவுடதங்கன் னிகைதவளங் குலவு பன்ன, லெ
ள்ளுநறு நெய்தயிர்பா லெண்ணெயொடு கள்ளுவிற்ற
லிவைகளாதி. (கஎசு)

எண்ணருந்தீ வினைபுரிந்த கொடியோருஞ் சிவநி
சிநோற்றியாம நான்கும், கண்ணறும்பூ வாலூறங் கடை
யாம லருச்சித்தோர் சமானமில்லார், நண்ணருமா மக
ம்புரிந்து நதிப்படிந்து தானமிக நல்கி னாலும், பண்ண
ருநற் பலவிரத மிழைத்தாலு மிதுபோலப் பயன்றரா
தே. (கஎஎ)

அன்னசிவ நிசிவிரதத் தாசகனு கேச்சுரத்தி லமு
த மூறுங், கன்னன் மொழி யுமையொடெமைக் கண்
டிடப்பெற் றனனதனாற் காயும் வெய்யோன், முன்ன
ரெதி ரிருளிமம்போ லுடைந்தகன்ற திவன்முதனாண்
முயன்ற பாவ, மென்னருநற் கணங்களுடன் கூடுகின்ற
வின்பமுத்தி யீதுபெற்றான். (கஎஅ)

என்றிறைவன் கூறுதலு நண்டதரன் மீண்டுரைப்பா
னிரக்கமின்றிக், கொன்றினமான் றசைபருந்தி மதுக்
குடித்து மனைவியர்தங்குழற்குச் சூட்ட, மன்றன்மலர்

(கஎசு) செருத்தல் = மடி; விள்ளும் = புகழும்; தவளம் = வெண்மை; பன்னல்=பருத்தி.

(கஎஎ) ஊறுஅங்கு அடையாமல்=அதில் குற்ற மில்லாமல்; நதிபடிந்து=யாகமுடிவில் அபவிரத ஸ்நானஞ்செய்து அல்லது கங்காநதியில் மூழ்கி.

(கஎஅ) முதல்நாள்=முன்நாட்களில்.

(கஎகூ) தண்டதரன் = தண்டத்தைத் தரித்தஇயமன்; ஆன் இனம்=பசுவர்க்கம்.

கொய்திடுவரின் வந்ததன்றி யன்புகொடு வந்தானல்ல, னுன்றனருளிதுவெனின்மற் றுரைப்பதெவ னெனப் பரம னுவனைநோக்கி. (கஎகூ)

எண்டருமெட் டுணையுளத்தன் பிலரேனு முளரே னு மிந்நா ளெம்மைக், கண்டவர்நோற் றவர்பூசை பண் ணினர்நற் கதியடைவர் காலநீநந்,தொண்டர்தமைக்கொ டும்பாசந் தனில்வீக்கித் துட்டவுருத் தோன்றக் காட் டித், தண்டமிழைக் குதறவிருன் றாதருக்கு மிந்தவழி சாற்றுகென்றான். (கஅ0)

செறிந்தவுயிர் கவருதற்குச் சேணெறிபோய் மற ந்தெனது சினவேற்றாதர், நெறிந்தபுரி சடைப்பரம நின்னடியா ரென்பவரை நினைவிற்றேறு, தறிந்தறியா திழைப்பர்தண்ட மவர்செயன்மற் றடையாள மறைதி யென்ன, மறிந்ததிரைக் கடல்விடமுண் டருடிருவாய் மலர்ந்திறைவன் வகுத்துச் சொல்வான். (கஅக)

சிரங்களங்கா திரண்டுதடந் திண்டிறற்றோ டாழ்ந் தவிரு செங்கைவாய்ந்த, வுரந்தனிற்கண் டிகைபுனை வோ ருருத்திரமந் திரநவில்வோ ருற்று வேண்டும்,

---

(கஅ0) எள் துணை = எள்ளளவு; வீக்கி=கட்டி; துட்டஉருத் தோன்ற=கோரவடிவம் விளங்க.

(கஅக) செறிந்த=பொருந்திய; சினவேல்=கோபமுள்ளவேல்; நெறிந்த=சுருண்ட; தண்டம் = தண்டனை; அறைதி =சொல்லுக.

(கஅஉ) உற்றுவேண்டும்=விருப்பமுற்றுக்கேட்கிற; கரடம்= =மதச்சுவடு; கடம்=மதம்; மாமுகன்=யானைமுகன்; பூ=அழகிய; முகங்கொள்=நுனியினை யுடைய; தச முகன்=இராவணன்.

வரங்கடரு கரடகட மாமுகனைப் பூமுகங்கொள் வடி வேற்றனை, கரங்கொள்விறற் சண்முகனைத் தசமுக னோ டரக்கர்தமைக் காய்ந்த மாலே. (கஅ௨)

பரைசிவரு பமதாகுஞ் சிவலிங்கந் தனைப்பூசை பண்ணு வோர்நல், விரைகமழு நந்தவனம் வைத்திடு வோர் கற்புடைய மின்னார் மிக்க, வுரைபெறுவெண் டிருநீறு பூசிடுவோர் சிவாலயங்க ளுஞற்றுகின்றோர், திரையெறிவா ரிதியுலகி லெமதடியார் தமைப்பூசை செய்யு மேலோர். (கஅ௩)

நின்மலமா மஞ்செழுத்தை யுளத்தழுத்திச் செபி த்திடுவோர் நிகரின் மாக, நன்மதிநீ ராடிடுவோர் பஞ் சபா தகந்தவிர்ந்தோர் நாள்கடோறும், துன்மதியி லாத துற வந்தணருக் காடையன்னஞ் சொன்னமீவோர், மன்மதியாற் குளங்கூவல் கல்லுவிப்போர் நிழல்சாலை வழியில் வைப்போர். (கஅ௪)

காசியிரா மேச்சுரம்பொற் கனகசபை யாரூர்கா ளத்தி காஞ்சி, மாசில்கழுக் குன்றமுது குன்றமொற்றி யூர்மருதூர் மதுரை யையா, றுசின்மறைக் காடுவெண் கா டானைக்கா மாயூர மருணை புள்ளூர், தேசுதருஞ்சிர புரநற் றிருப்புகலூர் முதற்றலங்கள்செகத்திலுண்டால்.

அத்தலங்க டமையடைந்து புனிதநீர்ப் படிந்தா டி யமலமாகிச், சித்தமகிழ்ந்தியாமுறையுஞ் சிவலிங்கந்

(கஅ௩) பரை=சத்தி; விரை=வாசனை; உஞற்றுகின்றோர் = கட்டுகின்றவர்.

(கஅ௪) மாகநல்மதி=நல்லமாசி மாதம்.

(கஅ௫) முதுகுன்றம்= விருத்தாசலம்; புள்ளூர் = வைத்தீசு வரன் கோயில்; சிரபுரம்=சீகாழி.

தெரிசனங்கள் செய்தோர்யாரு, முத்தர்சிவ கிசிவிரத நோற்றவர்கற் றிவரெவர்க்கு முதற்பேராகு, மித்தகை ய ருன்றாதர்க் கெளிபரலர்தண்டமிவர்க் கில்லையென் ருன். (கஅசு).

கருதியசொற் கேட்டுளத்தி னச்சமுடன் வீழ்ந்தி றைஞ்சிக் காலனைய, தருதிவிடை யெனப்பெற்று வை த்திடுமுத் திரைதாங்கித் தன்னூ ரெய்தி, வருதிரொனத் தூதர்தமை யழைத்தரன்சொன் மாற்றமெல்லாம் வகு த்துக்கூறி, யொருதிகிரி தனையுருட்டித் தென்புலங் காத் தினிதிருந்தா னுவப்பினோடும். (கஅஎ)

இச்சிவராத் திரிவிரத சரிதைதனைக் கேட்டோர்ம ற் றின்பாய்க் கற்றோர், கச்சையடுங் கொங்கைமங்கை பங்கனுறை கயிலையெய்திக் களிப்பரென்றே,யுச்சிதமாய் ச் சூதமுனி மாதவர்கேட் டுள்ளமுற்றுமுருகிவாயான், மெச்சிமகிழ்ந் திடவேத வியாதமுனி மொழிப்படியே விளம்பினனே. (கஅஅ)

---

(கஅஎ) சொல்மாற்றம்=சொல்லியவார்த்தை; திகிரி=ஆக்ஞா சக்கரம்.



